# उमामहेश्वरस्तोत्रम्

# உமாமஹேச்வர ஸ்தோத்ரம்

**(1)**

नमः शिवाभ्यां नवयौवनाभ्यां
परस्पराश्लिष्टवपुर्धराभ्याम् ।
नगेन्द्रकन्यावृषकेतनाभ्यां
नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥

நம: சிவாப்யாம் நவயௌவநாப்யாம்
பரஸ்பராச்லிஷ்ட வபுர்தராப்யாம்!
நகேந்த்ரகன்யா வ்ருஷகேத நாப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்யாம்!!

*இளம் வாலிப வயதினராய் ஒருவரோடு ஒருவர் இணைந்து சிவனும், சிவையுமாய், மலையரசன்மகளாயும், வ்ருஷபக்கொடியோனாயும் காட்சி தரும் சங்கர-பார்வதி தேவியருக்கு நமஸ்காரம் நமஸ்காரம்*

**(2)**

नमः शिवाभ्यां सरसोत्सवाभ्यां
नमस्कृताभीष्टवरप्रदाभ्याम् ।
नारायणेनार्चितपादुकाभ्यां
नमो नमःशङ्करपार्वतीभ्याम् ॥

நம: சிவாப்யாம் ஸரஸோத்ஸாவாப்யாம்
நமஸ்க்ருதா பீஷ்டவரப்ரதாப்யாம்!
நாராயணேநார்சித பாதுகாப்யாம்
நமோநம: சங்கர பார்வதீப்யாம்!!

*சிவனும் சிவையுமாய் இனிய விழா கண்டு நமஸ்கரித்த பக்தர்களின் விருப்பப்படி வரமளித்து, நாராயணன்தானே அர்ச்சிக்கும் காலடிகளைக் கொண்டு காட்சிதரும் ஸ்ரீசங்கர பார்வதியருக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.*

(3)

नमःशिवाभ्यां वृषवाहनाभ्यां
विरिञ्चिविष्ण्विन्द्रसुपूजिताभ्याम् ।
विभूतिपाटीर विलेपनाभ्यां
नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥

நம: சிவாப்யாம் வ்ருஷவாஹநாப்யாம்
விரிஞ்சி விஷ்ணு இந்த்ரஸுபூஜிதாப்யாம்!
விபூதிபாடீர விலேபனாப்யாம்
நமோநம: சங்கரபார்வதீப்யாம்!!

*விருஷப வாஹனம் ஏறியவர்களும், பிரம்மா, விஷ்ணு, இந்திரன் ஆகியோரால் பூஜிக்கப்பட்டவர்களும், விபூதி, சந்தனம் பூசியவர்களும் ஆன ஸ்ரீசங்கர-பார்வதியருக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.*

(4)

नमः शिवाभ्यां जगदीश्वराभ्यां
जगत्पतिभ्यां जयविग्रहाभ्याम् ।
जम्भारिमुख्यैरभिवन्दिताभ्यां
नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥

நம: சிவாப்யாம் ஜகதீச்வராப்யாம்
ஜகத்பதிப்யாம் ஜயவிக்ரஹாப்யாம்!
ஜம்பாரிமுக்யை ரபி வந்திதாப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்யாம்!!

*உலகத்தலைவர்களாயும், வெற்றியே வடிவமான வராயும், இந்திரன் முதலியோரால் போற்றப்பட்டவர்களுமான சங்கர-பார்வதியருக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.*

(5)

नमः शिवाभ्यां परमौषधाभ्यां
पञ्चाक्षरीपञ्जर रञ्जिताभ्याम् ।
प्रपञ्चसृष्टिस्थितिसंहृताभ्यां
नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥

நம:சிவாப்யாம் பரமௌஷதாப்யாம்
பஞ்சாக்ஷரீ பஞ்ஜரரஞ்ஜிதாப்யாம்!
ப்ரபஞ்ச ச்ருஷ்டிஸ்திதி-ஸம்ஹ்ருதாப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்யாம்!!

*(சம்ஸார வியாதிக்கு) அருமருந்தானவர்களாயும், பஞ்சாக்ஷரக்கூண்டில் விளையாடும் (கிளிகளாயும்), இந்த உலகை சிருஷ்டித்தும், காத்தும், ஒடிக்கியும் நிலவுகின்ற சிவ பார்வதியருக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.*

(6)

नमः शिवाभ्यामतिसुन्दराभ्यां –
अत्यन्तमासक्तहृदम्बुजाभ्याम् ।
अशेषलोकैकहितङ्कराभ्यां
नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥

நம: சிவாப்யாமதிஸுந்தராப்யாம்
அத்யந்தமாஸக்தஹ்ருதம்புஜாப்யாம்!
அசேஷ லோகைக ஹிதங்கராப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்யாம்!!

*மிக அழகிய தோற்றமுடைய சிவனும் சிவையும் தம் ஹ்ருதயத்தாமரைகள் மூலமும் மிகவும் ஒருங்கிணைந்துள்ளனர். அவர்கள் அனைத்துலகுக்கும் நன்மை செய்வதில் தமக்குத் தாமே நிகரானவர். அவர்களுக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.*

(7)

नमः शिवाभ्यां कलिनाशनाभ्यां
कङ्कालकल्याणवपुर्धराभ्याम् ।
कैलासशैलस्थितदेवताभ्यां
नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥

நம: சிவாப்யாம் கலிநாசனாப்யாம்
கங்கால கல்யாணவபுர்தராப்யாம்!
கைலாஸசைலஸ்தித தேவதாப்யாம்
நமோ நம: சங்கரபார்வதீப்யாம்!!

*கலிதோஷம் நீங்கச் செய்பவராயும், எலும்பு மிளிரும் மங்கல சரீரம் கொண்டவரும், கைலாஸத்தில் வாசம் செய்யும் தேவதைகளுமாகிய ஸ்ரீசங்கரபார்வதியருக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.*

**(8)**

**नमः शिवाभ्यामशुभापहाभ्यां –**
**अशेषलोकैकविशेषिताभ्याम् ।**
**अकुण्ठिताभ्यां स्मृतिसंभृताभ्यां**
**नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥**

நம: சிவாய்யாம் அசுபாபஹாப்யாம்
அசேஷலோகைகவிசேஷிதாப்யாம்!
அகுண்டிதாப்யாம் ஸ்ம்ருதி ஸம்ப்ருதாப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்யாம்!!

*அமங்கலங்களைப் போக்குபவரும், உலகமனைத்திலும் மேம்பட்டவரும், தடையில்லாதவரும், தியானத்தில் தேக்கப்பட்டவருமான சங்கரபார்வதியருக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.*

**(9)**

**नमः शिवाभ्यां रथवाहनाभ्यां**
**रवीन्दुवैश्वानरलोचनाभ्याम् ।**
**राकाशशाङ्काभमुखाम्बुजाभ्यां**
**नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥**

நம: சிவாப்யாம் ரத வாஹநாப்யாம்
ரவீந்து வைச்வாநரலோசனாப்யாம்!
ராகா சசாங்காப முகாம்புஜாப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்யாம்!!

*பௌர்ணமி சந்திரன் போன்ற முகங்களுடனும், சூர்ய, சந்திர, அக்னியாகிய கண்களுடனும் தேரில் ஏறிச் செல்பவரான சங்கர-பார்வதியருக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.*

**(10)**

**नमः शिवाभ्यां जटिलन्धराभ्यां**
**जरामृतिभ्यां च विवर्जिताभ्याम् ।**
**जनार्दनाब्जोद्भवपूजिताभ्यां**
**नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥**

நம: சிவாப்யாம் ஜடிலந்தராப்யாம்
ஜராம்ருதிப்யாம் ச விவர்ஜிதாப்யாம்!
ஜநார்தனாப்ஜோத்பவ பூஜிதாப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்யாம்!!

*ஜடையணிந்து, மூப்பு, மரணமில்லாதவரும், விஷ்ணு பிரம்ம தேவர்களால் வழிபட்ட வருமான சங்கர பார்வதியருக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.*

**(11)**

**नमः शिवाभ्यां विषमेक्षणाभ्यां**
**बिल्वच्छदामल्लिकदामभृद्भ्याम् ।**
**शोभावतीशान्तवतीश्वराभ्यां**
**नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥**

நம: சிவாப்யாம் விஷமேக்ஷணாப்யாம்
பில்வச்சதா மல்லிகதாமப்ருத்ப்யாம்!
சோபாவதீ சாந்தவதீச்வராப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்யாம்!!

*மூன்று கண்கள் உடையவராயும், பில்வ இதழ் மல்லிகை மாலை இவற்றை தரித்தவரும், அழகு, அமைதி இவற்றின் நாயகர்களாகவும் திகழ்கின்ற சங்கர பார்வதியருக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.*

(12)

नमः शिवाभ्यां पशुपालकाभ्यां
जगत्त्रयीरक्षणबद्धहृद्भ्याम् ।
समस्तदेवासुरपूजिताभ्यां
नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥

நம: சிவாப்யாம் பசுபாலகாப்யாம்
ஜகத்த்ரயீ ரக்ஷண பத்தஹ்ருத்ப்யாம்!
ஸமஸ்ததேவாஸுர பூஜிதாப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்யாம்!!

*ஜீவாத்மாக்களாகிய பசுக்களைப்பாதுகாப்பவரும், மூவுலகையும் காப்பதில் மனம் வைத்தவரும், அனைத்து தேவ, அசுரர்களாலும் போற்றப்பட்டவருமான சங்கரபார்வதியருக்கு நமஸ்காரம் நமஸ்காரம்.*

(13)

स्तोत्रं त्रिसन्ध्यं शिवपार्वतीभ्यां
भक्त्या पठेद्द्वादशकं नरो यः ।
स सर्वसौभाग्यफलानि भुङ्क्ते
शतायुरन्ते शिवलोकमेति ॥

ஸ்தோத்ரம் த்ரிஸந்த்யம் சிவபார்வதீப்யாம்
பக்த்யா படேத் த்வாதசகம் நரோ ய:
ஸ ஸர்வஸௌபாக்யபலாநி புங்க்தே
சதாயுரந்தே சிவலோக மேதி!!

*'சிவபார்வதீப்யாம் நம:' என்ற தொடருடைய பன்னிரண்டு பத்யங்களைக் கொண்ட ஸ்தோத்ரத்தை மூன்று வேளைகளிலும் படிப்பவர் எல்லாவித ஸௌபாக்யங்களையும் அனுபவித்து, நூறாண்டுகள் வாழ்ந்து, முடிவில் சிவலோகம் எய்துவர்.*

உமாமஹேச்வர ஸ்தோத்ரம் முற்றிற்று.